أحكام وآداب إسلامية ـ تاميلي

# இஸ்லாமிய வாழ்வும் நெறியும்

جمعية الدعوة بالزلفي

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

17

هاتف: ٤٢٣٤٤٦٦ ٠١٦ ـ فاكس: ٤٢٣٤٤٧٧ ٠١٦

# أحكام وآداب إسلامية

**أعده وترجمه إلـــى اللغة التاميلية:**

**جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي**

**الطبعة الخامسة: ١٤٤٢/٨ هــ.**


**ح شعبة توعية الجاليات بالزلفي، ١٤١٦هـ**

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

شعبة توعية الجاليات بالزلفي

أحكام وآداب إسلامية

٦٧ ص؛ ١٢ × ١٧ سم

ردمك : ٨-٨٠- ٨١٣-٩٩٦٠

(النص باللغة التاميلية )

١ -الإسلام - مجموعات　　　٢ - الأخلاق الإسلامية

أ. العنوان

ديوى ٢١٣　　　١٦/١٠٥٥

رقم الإيداع : ١٦/١٠٥٥

ردمك : ٨-٨٠- ٨١٣-٩٩٦٠

# பொருளடக்கம்

# أحكام وآداب إسلامية

# இஸ்லாமிய வாழ்வும் நெறியும்

## உளத்தூய்மையும் இறையச்சமும்

அல்லாஹ்கூறுகிறான்:"வணக்கத்தை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவர்களாக அவனையே வணங்க வேண்டும்என்றே அவர்கள் ஏவப்பட்டுள்ளார்கள்." (98:5)

"என் வணக்கத்தை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவனாக அவனையே நான் வணங்குகிறேன் என(நபியே!) நீர் கூறுவீராக!" (39:14)

"(நபியே!) நீர் கூறுவீராக! உங்களின் உள்ளங்களில் உள்ளதை நீங்கள் மறைத்தாலோ வெளிப் படுத்தினாலோ அதை அல்லாஹ் அறிகிறான்."" (3:29)

"வானத்திலும் பூமியிலும் எதுவுமே அல்லாஹ்வுக்கு மறைந்ததல்ல." (3:5)

நபி(ஸல்)கூறினார்கள்: "செயல்கள் யாவும் எண்ணங் களைப் பொருத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியதே கிடைக்கும்." அறிவிப்பவர்:உமர்(ரலி), நூல்: புகாரி-1, முஸ்லிம்-1907
"மறுமை நாளில் எனது பரிந்துரைக்கு மிகவும் தகுதி யுடையவர் தனது உள்ளத்திலிருந்து தூய

எண்ணத்துடன் 'லாஇலாஹ இல்லல்லாஹ்''-வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறியவரே''என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி-99

''நிச்சயமாக அல்லாஹ் உங்கள் உடல்களையோ உருவங்களையோ பார்ப்பதில்லை. மாறாக உங்கள் உள்ளங்களையும் செயல்களையுமே பார்க்கிறான்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-2564

''நீ எங்கிருந்தாலும் அல்லாஹ்வை அஞ்சிக் கொள். நீ தீமை செய்துவிட்டால் தொடர்ந்து நன்மை செய்திடு. அது அத்தீமையை அழித்துவிடும். மக்களிடம் நற்குணத்துடன் நடந்து கொள்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூதர் (ரலி), நூல்: திர்மிதி-1987

**பயன்கள்:**

**1.**உளத்தூய்மை நற்செயல் ஏற்கப்படுவதற்கு நிபந்தனை யாகும். அல்லாஹ்விடம் அதற்கு பன்மடங்கு கூலி கிடைப்பதற்கும் அதுவே அவசியமாகவும் இருக்கிறது.

**2.**இணைவைப்பை விட்டும் அல்லாஹ் தேவையற்றவன். அவனது திருமுகத்துக்காக செய்யப்பட்டதைத் தவிர வேறு எதையும் அவன் ஏற்றுக் கொள்ள மாட்டான். ஹதீஸ் குத்ஸியில்

அல்லாஹ் கூறியிருப்பதாக வந்துள்ளது: "என்னுடன் என் அல்லாதவரை இணையாக்கி ஒரு செயலை எவன் செய்கிறானோ அவனையும் அவனது இணை வைப்பையும் விட்டுவிடுவேன்"(முஸ்லிம்-2985)

**3.**வானம், புமியிலுள்ள எதுவும் அல்லாஹ்வுக்கு மறைந்த தல்ல என்ற காரணத்தால் எல்லா நிலையிலும் அவன் நம்மைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறான் எனக் கருதுவதும் அவனை அஞ்சுவதும் அவசியமாகும்.

**ஷிர்க் பற்றிய எச்சரிக்கையும் தவ்ஹீதின் சிறப்பும்**

அல்லாஹ் கூறுகிறான்:"இணைவைத்தல் மிகப் பெரும் அநியாயமாகும்." (31:13)

"தனக்கு இணைவைக்கப்படுவதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். அது அல்லாததை தான் நாடியோருக்கு மன்னிப்பான்."(4:48)

'நீர் இணை கற்பித்தால் உமது நல்லறங்கள் அழிந்து விடும். நிச்சயமாக நீர் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவீர்" என (நபியே!) உமக்கும் உமக்கு முன்னுள்ளவர்களுக்கும் வஹி அறிவிக்கப்பட்டுள்ளது." (39:65)

"ஜின்னையும் மனிதனையும் என்னை வணங்குவதற் காகவே தவிர (வேறு எதற்காகவும்) நான் படைக்க வில்லை." (51:56)

"அல்லாஹ்வையே வணங்குங்கள், தாகூத்"(தீய சக்தி) களை விட்டும் விலகிக் கொள்ளுங்கள் என்று திண்ணமாக நாம் ஒவ்வொருசமுதாயத்திலும் ஒரு தூதரை அனுப்பி வைத்தோம்."(16:36)

"அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் எவரேனும் அல்லாஹ்வைச் சந்தித்தால் அவர் சொர்க்கம் செல்வார். அவனுக்கு இணை கற்பித்த நிலையில் ஒருவன் அல்லாஹ்வைச் சந்தித்தால் அவன் நரகம் செல்வான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர்(ரலி),நூல்: முஸ்லிம்-93

"நாசத்தைத் தரக்கூடிய ஏழு காரியங்களைத் தவிர்ந்து கொள்ளுங்கள்" என நபி(ஸல்) அவர்கள் கூறியதும், 'அல்லாஹ்வின் தூதரே! அவை யாவை?"எனத் தோழர்கள் கேட்டனர். அதற்கவர்கள், "அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பது, சூனியம் செய்வது, அல்லாஹ் புனிதப்படுத்தி யிருக்கின்ற ஒரு உயிரை நியாயமின்றிக் கொலை செய்வது, அநாதையின் பொருளை உண்பது, வட்டி உண்பது, போர்க்களத்தில் புறமுதுகு காட்டுவது, முஃமினான, கற்புள்ள, அப்பாவிப் பெண்களை அவதூறு கூறுவது" எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி-2767, முஸ்லிம்-89

முஆது பின் ஜபல்(ரலி) அறிவிப்பதாவது: ஒரு கழுதையில் நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் இருந்தபோது, "முஆதே! அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமையும், அல்லாஹ் அடியார்களுக்குச் செய்ய வேண்டிய கடமையும் யாதென நீர் அறிவீரா?" என நபி(ஸல்) அவர்கள் கேட்டனர். நான் 'அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்" என்றேன். அதற்கு அவர்கள், "அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமை, அல்லாஹ்வை அவர்கள் வணங்குவதும் அவனுக்கு எதையும் எவரையும் இணை கற்பிக்காமல் இருப்பதுமாகும். அல்லாஹ் அடியார் களுக்குச் செய்ய வேண்டிய கடமை, அவனுக்கு எதையும் இணை கற்பிக்காதவர்களை அவன் வேதனை செய்யாம லிருப்பதாகும்"" எனக் கூறினார்கள். (புகாரி-5967,முஸ்லிம்-30)

**பயன்கள்:**

**1.**ஷிர்க் ஆபத்தானது. தவ்பா செய்யாமல் அதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். ஷிர்க் அல்லாஹ்வின் நாட்டத்திற்கு கீழுள்ள மற்ற பாவங்களைப் போன்றதல்ல.

**2.**இனணவைத்தவனாக மரணமடைகிறவனின் நற்செயல் அழிந்துவிடுகிறது. அவன் நரகத்தில் நிரந்தரமாக வீழ்வதற்கு உரிய காரணமாகவும் அது ஆகிவிடுகிறது.

**3.**ஜின்களும் மனிதர்களும் படைக்கப்பட்டதன் நோக்கம் தவ்ஹீதுக்காகத்தான் எனும் வகையில் தவ்ஹீதுக்குச் சிறப்பு உண்டு. அது சொர்க்கம் செல்வதற்கும் நரகத்திலிருந்து தப்பிப்பதற்குமுள்ள காரணங்களில் மிக முக்கியமானதாகும்.

**முகஸ்துதியின் ஆபத்து! அதுவும் ஒரு ஷிர்க்**

அல்லாஹ் கூறுகிறான்: "தமது தொழுகையில் கவனமற்று தொழுவோருக்கு கேடுதான். அவர்கள் பிறருக்கு காட்டு வதற்காகத் தொழுகின்றனர். அற்பமானதையும் (கொடுக்க) மறுக்கின்றனர்."(107:4-7)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: சந்தேகமில்லாத மறுமை நாளில் முன்னோர், பின்னோர் அனைவரையும் அல்லாஹ் ஒன்று சேர்க்கும்போது அறிவிப்புச் செய்பவர், 'எவர் அல்லாஹ் வுக்காகச் செய்த ஒரு செயலில் (அல்லாஹ்வுக்கு) இணை கற்பித்தாரோ அவர் அதற்குரிய கூலியை அல்லாஹ் அல்லாத வரிடம் வேண்டிக் கொள்ளட்டும். ஏனெனில் இணைவைப் போரின் இணைவைப்பை விட்டும் அல்லாஹ் தேவையற்றவன்" என அறிவிப்புச் செய்வார். நூல்: இப்னுமாஜா-4203

அறிவிப்பவர்: அபூஸயீது பின் பஃளாலா(ரலி)

நாங்கள் தஜ்ஜாலைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, "தஜ்ஜாலை விட உங்களின் மீது

நான் மிகவும் பயப்படக்கூடிய ஒன்றை அறிவிக்கட்டுமா?" எனக் கேட்டார்கள். நாங்கள் 'அறிவியுங்கள்" என்றோம். அதற்கு அவர்கள், "அது மறை முகமான ஷிர்க் ஆகும். அதாவது ஒருவர் தொழுவதற்காக நிற்கிறார், அப்போது அவரை வேறொருவர் பார்க்கிறார் என்பதற்காக அத்தொழுகையை அவர் அழகுறச் செய்வ தாகும்" எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஸஈத் (ரலி), நூல்: இப்னுமாஜா-4204

**பயன்கள்:**

**1.**முகஸ்துதியையும், அதைச் செய்பவர்களையும் கடுமையாக எச்சரிக்கப்பட்டுள்ளது.

**2.**மனிதன் சில சமயங்களில் தன்னையும் அறியாமலேயே முகஸ்துதியில் விழுந்து விடுகிறான்.

**3.**பிறருக்கு காட்டுவதற்காக செய்பவனின் செயல் அவனிடமே திருப்பப்படும், ஏற்கப்பட மாட்டாது.

**பிரார்த்தனை**

அல்லாஹ் கூறுகிறான்: "என்னிடம் பிரார்த்தியுங்கள். உங்களுக்கு பதிலளிக்கிறேன் என உங்கள் இறைவன் கூறுகிறான்." (40:60)

"என் அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால், 'நிச்சயமாக நான் (அவர்களுக்கு) அருகிலேயே இருக்கிறேன். எவரேனும் என்னிடம் பிரார்த்தித்தால் பிரார்த்திப்பவரின் பிரார்த்தனைக்கு

நான் பதிலளிக்கிறேன்" (என நபியே! நீர் கூறுவீராக!)." (2:186)

"உங்களின் இறைவனிடம் பணிவுடனும் இரகசியமாகவும் பிரார்த்தனை செய்யுங்கள். வரம்பு மீறியோரை அவன் நேசிக்க மாட்டான்." (7:55)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "பிரார்த்தனை தான் வணக்கம்." அறிவிப்பவர்: நுஃமான் பின் பஷீர்(ரலி)(திர்மிதி- 2969, அபூதாவுது-1479)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். "அடியான் தனது இறைவனுக்கு மிக நெருக்கமாக இருப்பது அவன் சுஜூதில் இருக்கும்போதுதான். எனவே (அந்த நிலையில்) அதிகம் துஆச் செய்யுங்கள்"
அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-482

ஆயிஷா (ரலி) அறிவிப்பதாவது:"குறைந்த வார்த்தைகளில் நிறைந்த அர்த்தங்களைக் கொண்ட துஆவை நபி(ஸல்) அவர்கள் விரும்புவார்கள், மற்றவற்றை விட்டுவிடுவார்கள்." (அபூதாவுது-1482)

"ஒரு முஸ்லிம் பிரார்த்திக்கும்போது பாவத்தையோ பந்த முறிவையோ கேட்காத வரை அவன் கேட்டதை அல்லாஹ் அவனுக்கு விரைந்து கொடுத்து விடுகிறான். அல்லது அதை மறுமையில் அவனுக்காக சேமித்து

வைக்கிறான். அல்லது அவன் கேட்ட அளவிற்கு ஒரு தீமையை அவனை விட்டும் தடுத்துவிடுகிறான்'' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: உபாதா பின் ஸாமித்(ரலி), (அஹ்மத்)

ஒரு முஸ்லிம் தனது சகோதரனுக்காக மறைந்திருந்து செய்கின்ற பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும். அவனது தலைப்பாகத்தில் (அவனுக்காக) பொறுப்பு ஒப்படைக்கப் பட்ட மலக்கு இருப்பார். அவன் தன் சகோதரனுக்காக நன்மையை வேண்டிப் பிரார்த்திக்கும்போதெல்லாம் அவனுக்காக பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட அந்த மலக்கு 'ஆமீன்'' எனவும் 'உனக்கும் இதுபோன்று கிடைக்கட்டுமாக!'' எனவும் கூறுவார் என நபி(ஸல்)அவர்கள் கூறியதாக அபூதர்(ரலி)அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்-2733)

**பயன்கள்:**

**1.**துஆ ஒரு வணக்கம். அல்லாஹ் அல்லாதவரிடம் துஆக் கேட்பது கூடாது. யாரேனும் அல்லாஹ் அல்லாதவரிடம் துஆ கேட்டால் அவன் இணை வைத்தவனாவான். நபி(ஸல்) அவர்கள் துஆவை வணக்கமாகவும் வணக்கத்திலேயே மிக முக்கியமான அங்கமாகவும் கணித்திருப்பதால் துஆவிற்கு மகத்தான அந்தஸ்திருப்பதை அறிந்து கொளுங்கள்.

**2.**துஆவின்போது சப்தத்தைத் தாழ்த்திக் கொள்வதும் அதுபோல ஜவாமிவுல் கலிமைக் கொண்டு துஆச் செய்வதும் விரும்பத்தக்கதாகும். 'ஜவாமிவுல் கலிம்'' என்பது குறைந்த வார்த்தைகளில் நிறைந்த அர்த்தங்களைக் கொண்டது.

**3.**ஒருவன் தனக்கோ தனது பொருளுக்கோ அல்லது தன்னுடைய குழந்தைகளுக்கோ பாதகமாக துஆச் செய்வது பற்றி எச்சரிக்கை செய்யபபடடுள்ளது.

**4.**முஸ்லிம்களுக்காக மறைந்திருந்து துஆச் செய்வது விரும்பத்தக்கதாக ஆக்கப்பட்டுள்ளது.

**5.**துஆச் செய்பவனுக்கு அவன் கேட்பது கொடுக் கப்படுவது கட்டாயமல்ல. எனினும் அவனது துஆவின் காரணமாக அவன் துஆக் கேட்ட அளவிற்கு அவனை விட்டும் தீமை தடுக்கப்படுகிறது அல்லது அதற்கான நன்மை மறுமை நாளில் அவனுக்காக சேமித்து வைக்கப்பட்டு அதன் பால் அவன் மிகத் தேவையுடையவனாக இருக்கும்போது அவனுக்குக் கொடுக்கப்படும்.

**6.**ஹராமான பொருளை உண்பதும் ஹராமான ஆடையை அணிவதும் துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதற்குத் தடையாக இருக்கின்றது.

**கல்வி**

அல்லாஹ்கூறுகிறான்: "அறிந்தோரும் அறியாதோரும் சமமாவார்களா? என (நபியே!) நீர் கேட்பீராக." (39:9)

"உங்களில் நம்பிக்கை கொண்டோருக்கும் கல்வி வழங்கப்பட்டோருக்கும் அல்லாஹ் பதவிகளை உயர்த்துவான். " (58:11)

"என் இறைவனே! எனக்கு கல்வியை அதிகப்டுத்து என (நபியே!) நீர் கூறுவீராக! " (20:114)

"நிச்சயமாக அல்லாஹ்வின் அடியார்களில் அவனுக்குப் பயப்படுபவர்கள் அறிஞர்கள் தாம்." (35:28)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "எவருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகிறானோ அவரை மார்க்கத்தில் விளக்கம் பெற்றவராக ஆக்கிவிடுகிறான்."
அறிவிப்பவர்:முஅவியா(ரலி),(புகாரி-71, முஸ்லிம்-1037)

"கல்வியைக் கற்றுக் கொடுப்பவருக்கு அதைக் கொண்டு செயல்படுபவரின் நன்மை கிடைக்கும். எனினும் செயல் பட்டவரின் நன்மையில் எதுவும் குறைக்கப்பட மாட்டாது" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பவர்:அனஸ்(ரலி),நூல்:இப்னுமாஜா -240

''மனிதன் இறந்துவிட்டால் மூன்று காரியங்களைத் தவிர அவனுடைய செயல்களுக்குரிய கூலி துண்டிக்கப்படுகிறது. (அவை) தொடர்ந்து நன்மை தருகின்ற தர்மம், பயனுள்ள கல்வி, அவனுக்காகத் துஆச் செய்யக்கூடிய நல்லொழுக்க முள்ள குழந்தை'''' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபுஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்-1631)

''அல்லாஹ்வின் மீது ஆணையாக! உன் மூலம் ஒரு மனிதனுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவது சிவந்த ஒட்டகங்களை விட உனக்கு சிறந்ததாகும்''என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஸஹ்ல் பின் ஸஃது(ரலி) (புகாரி-4210)

''என் மூலமாக ஒரு செய்தி தெரிந்திருந்தாலும் அதை பிறருக்கு எடுத்துச் சொல்லுங்கள்'' நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பவர்:இப்னுஅம்ர்(ரலி),(புகாரி-461)

**பயன்கள்:**

**1.**மேற்கூறப்பட்ட வசனங்களிலும் நபிமொழிகளிலும் கல்வி மற்றும் கற்றோரின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. மார்க்கத்தில் விளக்கம் பெறுவது அல்லாஹ் அடியானுக்கு நன்மையை நாடியிருப்பதற்குச் சான்றாக இருக்கிறது. அதுபோல கல்வியைத் தேடுவது சொர்க்கம் செல்வதற்குரிய காரணங்களில் ஒன்றாக இருக்கிறது.

**2.**மக்களுக்குக் கல்வி கற்றுக் கொடுப்பது, நன்மையின் பக்கம் அவர்களுக்கு வழிகாட்டுவது, கல்வியை எடுத்துச் சொல்லுவது இவை யாவும் குறைவாக இருந்தாலும் இவற்றின் கூலி மகத்தானது. மேலும் இவை மனிதன் இறந்த பின்னும் பயனளிக்கின்றன.

**3.**கல்வியைத் தேடுவது உபரியான வணக்கங்களை விட மிகச் சிறந்தது.

**4.**குழந்தைகளுக்கு நல்லொழுக்கம் போதித்து, நல்ல முறையில் வளர்ப்பதில் கவனம் செலுத்த வேண்டும்.

**நன்மையை ஏவி தீமையைத் தடுத்தல்**

அல்லாஹ்கூறுகிறான்: "மக்களுக்காகத் தோற்றுவிக்கப் பட்ட சிறந்த சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள். நன்மையை ஏவுகிறீர்கள், தீமையைத் தடுக்கிறீர்கள், அல்லாஹ்வை நம்புகிறீர்கள்." (3:110)

"நன்மையை ஏவி, தீமையைத் தடுத்து, நல்வழியை நோக்கி அழைக்கக்கூடிய ஒரு கூட்டம் உங்களில் இருக்க வேண்டும். அவர்களே வெற்றி பெற்றவர்கள்." (3:104)

நபி(ஸல்) அவர்கள்கூறினார்கள்: "உங்களில் யாரேனும் தீமையைக் கண்டால் அவர் தன் கையால் அதைத் தடுக்கட்டும். அதற்கு இயலவில்லையென்றால் தன் நாவால் தடுக்கட்டும் அதற்கும் இயலவில்லையெனில்

தன் மனதால் அதை வெறுக்கட்டும். இது ஈமானில் மிகபலவீனமானதாகும்."அறிவிப்பவர்: அபுஸயீத்(ரலி), நூல்: முஸ்லிம்-49

"எனது உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! நீங்கள் நன்மையை ஏவி, தீமையைத் தடுத்துக் கொண்டிருங்கள். அவ்வாறு செய்யவில்லை யெனில் அல்லாஹ் உங்களின் மீது தனது வேதனையை விரைவில் அனுப்பபி வைப்பான். பிறகு நீங்கள் அவனிடம் துஆச் செய்வீர்கள். அது உங்களுக்கு ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஹுதைபா (ரலி), நூல்: திர்மிதி-2169

"மக்கள் அநியாயம் செய்பவனைப் பார்த்து அவனுடைய கையைப் பிடித்து அவனைத் தடுத்து நிறுத்தவில்லை எனில் அல்லாஹ் தனது வேதனையை நல்லவர், தீயவர் எனும் பாகுபடின்றி அனைவர் மீதும் இறக்கிவிடுவான்"என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக அபூபக்கர் (ரலி) அறிவிக்கிறார்கள்.நூல்:அபுதாவுத்-4238, திர்மிதி-2168

**பயன்கள்:**

**1.**நன்மையை ஏவி, தீமையைத் தடுப்பது வெற்றிக்குக் காரணமாக இருக்கிறது.

**2.**யார் தீமையைக் காணுகிறாரோ அவர் தம்மால் முடிந்த அளவு அதைத் தடுப்பது கடமையாகும்.

**3.**கையால் தடுப்பதென்பது அதற்கு சக்தியுள்ளவனுக் குத்தான். உதாரணமாக தந்தை தம் வீட்டில் தீமையைத் தடுப்பது அல்லது அதிகாரம் வழங்கப்பட்டவர் அல்லது அவருடைய பிரதிநிதி (தம் அதிகாரத்தின் கீழுள்ளவர்களிடம்) தீமையைத் தடுப்பது.

**4.**மனதால் தடுப்பதென்பதில் தீமையை வெறுப்பதும், அதிலிருந்து நீங்குவதும் அவசியமாகும்.

**5.**நன்மையை ஏவி, தீமையைத் தடுக்காமல் இருப்பது அல்லாஹ்வின் தண்டனைக்குக் காரணமாக அமைவதுபோல் பிரார்த்தனை ஏற்கப்படாமல் இருப்பதற்கும் காரணமாக இருக்கிறது.

**நன்மையை ஏவி தீமையைத் தடுப்பதற்குரிய ஒழுங்கு முறைகள்**

அல்லாஹ் கூறுகிறான்: "(நபியே!)விவேகத்துடனும் அழகிய அறிவு மூலமாகவும் உம் இறைவனின் பாதையின் பக்கம் அழைப்பீராக! அவர்களிடம் அழகிய முறையில் விவாதம் செய்வீராக!" (16:125)

"(நபியே!) அல்லாஹ்வின் அருளின் காரணமாகவே நீர் அவர்களிடம் நளினமாக நடந்து கொள்கிறீர். நீர் முரட்டுத் தனம் உடையவராகவும் கடின உள்ளம்

உடையவராகவும் இருந்திருந்தால் அவர்கள் உம்மை விட்டு ஓடியிருப்பார்கள்."'' (3:159)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: ''அல்லாஹ் மென்மை யானவன். எல்லா காரியங்களிலும் அவன் மென்மையையே விரும்புகிறான்."'' அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி), நூல்: புகாரி-6927, முஸ்லிம்-3689

''மென்மை ஒரு காரியத்தில் இருந்தால் அதனை அது அழகுபடுத்தவே செய்யும். ஒரு காரியத்திலிருந்து அது (மென்மை) எடுபட்டு விட்டால் அது அதனைக் கெடுத்து விடும்'' எனவும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பவர்:ஆயிஷா(ரலி)நூல்:முஸ்லிம்-2594

''மென்மையை இழந்தவர் எல்லா நன்மையையும் இழந்தவராவார்'' என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜரீர்(ரலி), முஸ்லிம்-2592

**பயன்கள்:**

**1.**மென்மையாக நடந்துகொள்ளுதல், அழைப்புப் பணியில் விவேகத்தைப் பின்பற்றுதல், நன்மையை ஏவி, தீமையைத் தடுத்தல் ஆகியவற்றுக்கு ஆர்வமூட்டப்பட்டுள்ளது.

**2.**எல்லா காரியங்களிலும் மென்மையான போக்கை மேற்கொள்ள ஆர்வமூட்டப்பட்டுள்ளது. ஏனெனில் மென்மையை இழந்தவர் எல்லா நன்மையையும் இழந்தவர் ஆவார்.

**பெற்றோருக்கு உபகாரம் செய்தல்**

அல்லாஹ்கூறுகிறான்:"தன்னுடையதாய்,தந்தையரிடம் நல்ல முறையில் நடந்துகொள்ள வேண்டும் என்று நாம் மனிதனுக்கு அறிவுறுத்தினோம்." (29:8)
"அவனைத் தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது என்றும் தாய் தந்தையருக்கு நன்மை செய்ய வேண்டும் என்றும் உமது இறைவன் விதித்துள்ளான். அவர்களில் ஒருவரோ இருவருமோ முதுமையை அடைந்து விட்ட நிலையில் உம்மிடம் இருந்தால் அவர்களைச் 'சீ" எனக் கூறாதீர். அவ்விருவரையும் விரட்டாதே! மரியாதையான சொல்லையே அவ்விருவரிடமும் கூறுவீராக." (17:23)

"மனிதனுக்கு அவனது பெற்றோரைக் குறித்தும் நாம் அறிவுறுத்தியுள்ளோம். அவனுடைய தாய் பலவீனத்துக்கு மேல் பலவீனப்பட்டவளாகச் சுமந்தாள். மேலும் அவன் அருந்தும் பருவம் இரண்டு ஆண்டுகள். எனக்கும் உனது பெற்றோருக்கும் நன்றி செலுத்துவாயாக! என்னிடமே திரும்புதல் உண்டு." (31:14)
'அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான செயல் எது?" என நபி (ஸல்) அவர்களிடம் நான் கேட்டேன்.

''தொழுகையை அதற்குரிய நேரத்தில் நிறைவேற்றுவது''எனக் கூறினார்கள். 'அதற்கடுத்தது எது?'' என்று கேட்டேன். ''பெற்றோருக்கு உபகாரம் செய்வது''எனக் கூறினார்கள்.''அதற்கடுத்தது எது?'' என்று கேட்டேன்.'அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது''எனக் கூறினார்கள்.
அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத்(ரலி) புகாரி-527

ஒரு மனிதர் நபி(ஸல்)அவர்களிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! மனிதர்களில் நான் அழகிய முறையில் நடந்து கொள்வதற்கு மிகத் தகுதியானவர் யார்?''எனக் கேட்டார். அதற்கு நபி(ஸல்) ''உனது தாய்''எனக் கூறினார்கள். 'அதற்கடுத்தது யார்?'' எனக் கேட்டார். ''உனது தாய்'' எனக் கூறினார்கள். 'அதற்கடுத்தது யார்?''எனக் கேட்டார்.''உனது தாய்'' எனக் கூறினார்கள். 'அதற்கடுத்தது யார்?'' எனக் கேட்டார்.''உனதுதந்தை''எனக்கூறினார்கள்.
அறிவிப்பவர்:அபூஹுரைரா(ரலி)
நூல்:புகாரி-5971,முஸ்லிம்-2548

**பயன்கள்:**

**1.**இஸ்லாம் பெற்றோரைக் கண்ணியப்படுத்துகிறது. அவ்விருவருக்கும் கட்டுப்பட்டு நடக்கும்படி ஏவுகிறது. அவ்விருவருக்கும் உபகாரம் செய்வதற்கு ஆர்வமூட்டுகிறது.

**2.**தொழுகையை உரிய நேத்தில் நிறைவேற்றுவதற்குப் பிறகு அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான செயல் தாய் தந்தையருக்கு உபகாரம் செய்வதாகும்.

**3.**பெற்றோரை நிந்திப்பது, அவர்களிடம் கடிந்து பேசுவது, அவர்களைச் 'சீ'' எனக் கூறுவது ஆகியவை பற்றி கடுமையாக எச்சரிக்கப் பட்டுள்ளது.

**4.**தாயின் அந்தஸ்து விளக்கப்பட்டுள்ளது. கட்டுப்படு வதிலும், உபகாரம் செய்வதிலும் தந்தையை விட தாய்க்கு முன்னுரிமை வழங்கப்பட்டுள்ளது.

**நற்குணம்**

அல்லாஹ்கூறுகிறான்: ''(நபியே!) அல்லாஹ்வின் அருளின் காரணமாகவே நீர் அவர்களிடம் நளினமாக நடந்து கொள்கிறீர். நீர் முரட்டுத் தனம் உடையவராகவும் கடின உள்ளம் உடையவராகவும் இருந்திருந்தால் அவர்கள் உம்மை விட்டு ஓடியிருப்பார்கள்.'' (3:159)

''(நபியே!) நீர் மகத்தான குணத்தில் இருக்கிறீர்.'' (68:4)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''மறுமை நாளில் முஃமின்களின் தராசில் நற்குணத்தை விட கனமானது வேறு எவும் இருக்காது. அல்லாஹ் ஆபாசமான, கெட்ட வார்த்தைகளை வெறுக்கிறான்.''''
அறிவிப்பவர்: அபுத்தர்தா(ரலி), நூல்: திர்மிதி-2002

'பெரும்பாலும் மனிதர்களை சொர்க்கத்தில் சேர்ப்பது எது?" என நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு, "இறையச்சமும் நற்குணமும்தான்" என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி) நூல்: திர்மிதி-2004

"முஃமின்களில் பரிபூரணமான ஈமானை உடையவர் அவர்களில் மிக அழகிய குணமுடையவரே. தம் மனைவியர் இடத்தில் சிறந்தவரே உங்களில் சிறந்தவர்"" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: திர்மிதி-1162

பகலெல்லாம் நோன்பு நோற்று இரவெல்லாம் நின்று வணங்கியவர் அடையும் அந்தஸ்தை ஒரு முஃமின் தனது அழகிய குணத்தால் அடைந்து விடுகிறான் என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி),(அபூதாவுது-4798)

**பயன்கள்:**

**1.**நபிகளாரின் நற்குணம் விளக்கப்பட்டுள்ளது.

**2.**நற்குணத்தின் சிறப்பும், அந்தஸ்தும் கூறப்பட்டுள்ளது. நற்செயல்களில் 'பெரும்பாலும் சொர்க்கத்தில் நுழையச் செய்வதும், அந்தஸ்துகளை உயர்த்தக்கூடியதும் நற்குணம் ஆகும். செயல்கள் மறுமையில் நிறுக்கப்படும் எனவும் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. முஸ்லிமின் தராசில் மிகக் கனமானது இறையச்சமும் நற்குணமுமே.

**3.**சொல்லிலும் செயலிலும் அழகிய முறையில் நடந்து கொள்வதற்கு இஸ்லாம் ஆர்வ மூட்டுகிறது. தீய ஆபாசமான சொல், செயல்கள் குறித்து எச்சரிக்கை செய்கிறது.

**4.**கணவன், மனைவியிடையே நல்ல முறையில் நடந்து கொள்வதன் முக்கியத்துவம் கூறப்பட்டுள்ளது.

**5.**வழிபாடு செய்வதன் மூலம் ஈமான் அதிகரிக்கவும், பாவம் செய்வதன் மூலம் குறையவும் செய்யும்.

**மென்மையும் நிதானமும்**

அல்லாஹ் கூறுகிறான்: "(நபியே!)விவேகத்துடனும் அழகிய அறிவு மூலமாகவும் உம் இறைவனின் பாதையின் பக்கம் அழைப்பீராக! அவர்களிடம் அழகிய முறையில் விவாதம் செய்வீராக!"" (16:125)

"(நபியே!) அல்லாஹ்வின் அருளின் காரணமாகவே நீர் அவர்களிடம் நளினமாக நடந்து கொள்கிறீர். நீர் முரட்டுத் தனம் உடையவராகவும் கடின உள்ளம் உடையவராகவும் இருந்திருந்தால் அவர்கள் உம்மை விட்டு ஓடியிருப்பார்கள்." (3:159)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ் மென்மை யானவன். எல்லா காரியங்களிலும் அவன் மென்மையையே விரும்புகிறான்."
அறிவிப்பவர்:ஆயிஷா(ரலி),நூல்:புகாரி-6927,முஸ்லிம்-3689

"உம்மிடம் அல்லாஹ் விரும்பக்கூடிய இரு குணங்கள் உள்ளன. அவை மென்மையும், நிதானமுமாகும் என நபி (ஸல்) அவர்கள் அஷஜ்ஜு அப்துல் கைஸ்(ரலி) யிடம் கூறினார்கள்.
அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரலி)(முஸ்லிம்-17)
"மென்மை ஒரு காரியத்தில் இருந்தால் அதனை அது அழகுபடுத்தவே செய்யும். ஒரு காரியத்திலிருந்து அது (மென்மை) எடுபட்டு விட்டால் அது அதனைக் கெடுத்து விடும் " எனவும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி) நூல்: முஸ்லிம்-2594
"மென்மையை இழந்தவர் எல்லா நன்மையையும் இழந்தவராவார்" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஜரீர்(ரலி), முஸ்லிம்-2592

**பயன்கள்:**

**1.**அல்லாஹ் மென்மையை விரும்புகிறாரன். திண்ணமாக நன்மை விளைவதற்கு மென்மை காரணமாக இருக்கும்.

**2.**மக்களிடத்தில் கொடுக்கல், வாங்கலின் போது மென்மையாகவும் தாரளமாகவும் நடந்து கொள்வது சொர்க்கவாசிகளின் பண்பாடாகும்.

**3.**பொறுமையின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. கோபம் குறித்து எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது.

**கருணை**

தனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான்: "நம்பிக்கை கொண்டோரிடம் மிகவும் கருணையுடையவராகவும் மிக்க பரிவு உடையவராகவும் இருக்கிறார்." (9:128)

மேலும் நம்பிக்கை கொண்டோரைப் பற்றிக் அல்லாஹ் கூறுகிறான்: "தமக்கிடையே கருணையுடையவர்களாக இருப்பார்கள்." (48:29)

"மனிதர்களுக்குக் கருணை காட்டாதவருக்கு அல்லாஹ் கருணை காட்ட மாட்டான்" என நபி(ஸல்) கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஜரீர் பின் அப்துல்லாஹ்(ரலி), நூல்: புகாரி-7379, முஸ்லிம்-2319

"துர்ப்பாக்கியம் உடையவனிடமிருந்து தான் கருணை பறிக்கப்படுகின்றது" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபுஹுரைரா (ரலி), நூல்: அஹ்மது, திர்மிதி-1923

**பயன்கள்:**

**1.** கருணை காட்டுதல் முஃமின்களின் பண்பு.

**2.** மனிதர்களுக்குக் கருணை காட்டுவது அல்லாஹ்வின் கருணை கிடைப்பதற்குக் காரணமாகும்.

**3.** மனிதனின் உள்ளத்திலிருந்து கருணை அகற்றப்படுவது அவனது துர்ப்பாக்கியத்திற்குச் சான்றாகும்.

**அநியாயம் செய்யாதீர்**

அல்லாஹ் கூறுகிறான்: "அநியாயக்காரர் களுக்கு (மறுமை நாளில்) எந்த நண்பனும் அங்கீகரிக்கப்படும் பரிந்துரை யாளனும் இருக்க மாட்டான்." (40:18)
அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "எனது அடியார்களே! அநியாயம் செய்வதை எனக்கு நானே தடை செய்திருக்கிறேன். உங்களுக்கிடையேயும் அதை தடை செய்யப்பட்டதாக ஆக்கியுள்ளேன். எனவே நீங்கள் ஒருவருக்கொருவர் அநியாயம் செய்யாதீர்கள்... "
அறிவிப்பவர்: அபூதர்(ரலி), நூல்: முஸ்லிம்-2577

''அநீதியிழைப்பதைப் பயந்து கொள்ளுங்கள். அநீதி மறுமை நாளின் இருள்களில் ஒன்றாகும் '' என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர்(ரலி), நூல்: முஸ்லிம்-2578

நபி(ஸல்)அவர்கள் என்னை யமன் நாட்டிற்கு அனுப்பிய போது, ''அநீதி இழைக்கப்பட்டவனின் பிரார்த்தனையை நீ அஞ்சிக்கொள். அந்தப் பிரார்த்தனைக்கும் அல்லாஹ்வுக்கு மிடையே எந்தத் திரையுமில்லை'''' எனக் கூறினார்கள்.
அறிவிப்பவர்:முஆத்(ரலி),(புகாரி-2448, முஸ்லிம்-2014)

ஒருவர் தனது சகோதரனின் மான மரியாதை விஷயத் திலோ அல்லது வேறு ஏதேனும் ஒரு விஷயத்திலோ அநீதி இழைத்திருந்தால் தீனாரும் திர்ஹமும் பலன் தராத (மறுமை) நாள் வருவதற்கு முன்னால் அவர் இன்றே அவனிடம் சென்று மன்னிப்பு கேட்டுக் கொள்ளட்டும். அப்போது (அந்நாளில்) அநீதியிழைத்தவனிடம் நன்மைகள் இருந்தால் அவன் செய்த அநீதி அளவுக்கு அவை அவனிடமிருந்து எடுக்கப்படும். அவனிடம் நன்மைகள் இல்லையென்றால் அநீதிழைக்கப் பட்டவனின் தீமைகளை எடுத்து அவன் மீது சுமத்தப்படும்'''' என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: புகாரி-2449

**பயன்கள்:**

**1.**அநியாயம் செய்வது தடை செய்யப்பட்டுள்ளதோடு அது குறித்து அச்சமூட்டப்பட்டுள்ளது.

**2.**அநியாயம் செய்தவனுக்கு இம்மையிலும், மறுமையிலும் கடும் தண்டனை உண்டு.

**3.**அநியாயம் செய்தவனுக்கு எதிராக அநீதி இழைக்கப் பட்டவன் செய்யும் துஆ ஏற்றுக் கொள்ளப்படும்.

**முஸ்லிமின் உயிர் புனிதமானது**

அல்லாஹ் கூறுகிறான்: "ஒரு முஃமினை வேண்டுமென்றே ஒருவன் கொலை செய்து விட்டால் அவனுக்கு தண்டனை நரகமே. அதில் அவன் நிரந்தரமாக இருப்பான். அல்லாஹ் அவன் மீது கோபம் கொள்கிறான், அவனை சபிக்கிறான், மேலும் அவனுக்குக் கடும் தண்டனையைத் தயாரித் துள்ளான்."" (4:93)

"மறுமையில் மனிதர்களிடையே தீர்ப்பு வழங்கப்படும் காரியங்களில் முதலாவது கொலைகள் பற்றியதாகும்" நபிமொழி. அறிவிப்பாளர்: இப்னு மஸ்வுத்(ரலி)(புகாரி-6864,முஸ்லிம்-1678)

"ஒரு முஸ்லிமைக் கொலை செய்வதை விடவும் உலகம் அழிந்துபோவது அல்லாஹ்விடத்தில் மிக

அற்பமானதாகும்."" எனவும் நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்.
அறிவிப்பவர்: இப்னு அம்ர்(ரலி)(திர்மிதி-1395, நஸயீ-9322)

**பயன்கள்:**

**1.**ஒரு முஸ்லிமைக் கொலை செய்வது பற்றி எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது. அல்லாஹ்விடத்தில் ஒரு முஸ்லிமுக்குரிய கண்ணியம் மகத்தானது என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

**2.**மறுமையில் மனிதர்களிடையே தீர்ப்பு வழங்கப்படும் காரியங்களில் முதலாவது கொலைகள் பற்றியாகும். காரணம் அதிலுள்ள குற்றம் மிகக் கடுமையானது என்பதால்.

**3.**கொலைக் குற்றத்திற்கு உலகில் வழங்கப்படும் தண்டனை கொலைக்குக் கொலை. மறுமையிலோ நிரந்தர நரகமாகும்.

**முஸ்லிமின் உரிமைகள்**

அல்லாஹ் கூறுகிறான்: "முஃமின்கள் அனைவரும் சகோதரர்களே."" (49:10)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: ''கட்டடங்களில் ஒரு பகுதி இன்னொரு பகுதியை இறுக்கிப் பிடித்து (உதவியாய்) இருப்பது போல ஒரு முஃமின் இன்னொரு முஃமினுக்கு உதவியாக இருப்பான்.'' அறிவிப்பவர்: அபுமூஸா (ரலி), நூல்: புகாரி-2446

''ஒரு முஸ்லிம் பிற முஸ்லிமுக்கு சகோதரனாவான். எனவே அவனுக்கு மோசடி செய்ய வேண்டாம். அவனைப் பொய்ப் படுத்த வேண்டாம். (தேவையான சமயத்தில்) அவனுக்கு உதவாமல் இருக்க வேண்டாம். ஒரு முஸ்லிமின் மானம், உயிர், உடமை ஆகியவை மற்றொரு முஸ்லிமுக்கு ஹராம் ஆகும். இறையச்சம் இங்கேதான் இருக்கிறது. ஒருவன் தன் முஸ்லிம் சகோதரரை இழிவாகக் கருதுவதே அவனுக்குத் தீமை நேரப் போதுமானதாகும் என நபி(ஸல்)கூறினார்கள். அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: திர்மிதி-1927

'தனக்கு விரும்புவதையே தன் சகோதரனுக்கும் விரும்பாத வரை உங்களில் யாரும் முஃமினாக முடியாது'' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ்(ரலி),நூல்:புகாரி-13, முஸ்லிம்-45

''யாரேனும் ஒரு முஸ்லிமின் கஷ்டத்தை நீக்கினால் மறுமை நாளின் கஷ்டங்களில் ஒன்றை அல்லாஹ் அவரை விட்டும் நீக்குவான். கடனால் சிரமப்படுபவருக்கு(கடனை தள்ளுபடி செய்து அல்லது கூடுதலான அவகாசம் வழங்கி) யாரேனும் சலுகை

வழங்கினால் இவ்வுலகிலும் மறுமையிலும் அவருக்கு அல்லாஹ் சலுகையளிக்கிறான். ஒரு முஸ்லிமின் குறையை யாரேனும் மறைத்தால் இவ்வுலகிலும் மறுமையிலும் அவரது குறையை அல்லாஹ் மறைக்கிறான். ஒரு அடியான் தன் சகோரதனுக்கு உதவும்போதெல்லாம் அல்லாஹ் அவ்வடியானுக்கு உதவுகிறான்'' என நபி(ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி),நூல்: திர்மிதி-1930

**பயன்கள்:**

**1.**ஒரு முஃமின் மற்றொரு முஃமினுக்கு சகோதரர். அவா; சிறியவராயினும் பெரியவராயினும் ஆளுபவராயினும் ஆளப்படு பவராயினும் சரியே!

**2.**முஸ்லிம்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்ய வேண்டும் ஒத்துழைப்பு தேவைப்படுபவருக்கு ஒத்துழைப்பு நல்கிட வேண்டும் என்றும் ஆர்வமூட்டடப்பட்டுள்ளது. ஆனால் உதவியும் ஒத்துழைப்பும் பாவம் அல்லாத காரியத்தில் இருக்க வேண்டும்.

**3.**தேவையுடையவருக்கு உதவி செய்வதன் சிறப்பும் அதன் மகத்தான கூலியும் சொல்லப்பட்டுள்ளது.

**அண்டை வீட்டாரின் உரிமைகள்**

அல்லாஹ் கூறுகிறான்:''அல்லாஹ்வை வணங்குங்கள், அவனுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். தாய், தந்தை யர்களுக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், உறவினரான

அண்டை வீட்டாருக்கும் அந்நியரான அண்டை வீட்டாருக்கும் பக்கத்தில் இருக்கும் நண்பருக்கும் வழிப்போக்கர்களுக்கும் உபகாரம் செய்யுங்கள்." (4:36)

"அல்லாஹ்வின் மீது ஆணையாக அவன் முஃமினாக மாட்டான்! அல்லாஹ்வின் மீது ஆணையாக அவன் முஃமினாக மாட்டான்! அல்லாஹ்வின் மீது ஆணையாக அவன் முஃமினாக மாட்டான்!" என நபி(ஸல்) கூறியபோது 'அல்லாஹ்வின் தூதரே! யாரவன்?" எனக் கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள் "எவனுடைய தொல்லைகளை விட்டும் அண்டை வீட்டார் பாதுகாப்பு பெறவில்லையோ அவன் தான்"என கூறினார்கள். அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: புகாரி-6016

"அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புகின்றவர் தனது அண்டை வீட்டாருக்குத் தொல்லை கொடுக்க வேண்டாம். அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புகிறவர் தனது விருந்தி னரைக் கண்ணியப் படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை யையும் நம்புகிறவர் நல்லதைச் சொல்லட்டும் அல்லது மௌனமாக இருந்து கொள்ளட்டும்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: புகாரி-6018

**பயன்கள்:**

**1.**அண்டை வீட்டாருக்கு உபகாரம் செய்வதற்கும் அவர்க ளுக்குத் தொல்லை கொடுக்காமலிருப்பதற்கும் ஆர்வமூட்டப் பட்டுள்ளது.

**2.**ஒரு மனிதன் அண்டை வீட்டாரிடம் நல்ல முறையில் நடந்து கொள்வதும் அவருக்குத் தொல்லை தராமல் இருப்பதும் அவனிடம் பரிபுரணமான ஈமான் உள்ளது என்பதற்குச் சான்றாகும். அவர் முஸ்லிமல்லாதவராக இருந்தாலும் சரியே

**நாவின் ஆபத்து**

அல்லாஹ் கூறுகிறான்: "அவன் எந்தச் சொல்லைப் பேசினாலும் அவனிடம் கண்காணிக்கும் எழுத்தாளர் இல்லாமல் இருப்பதில்லை." (50:18)

"உமக்கு அறிவு இல்லாததை நீ பின்பற்றாதே! செவி, பார்வை, உள்ளம் ஆகிய அனைத்துமே விசாரிக்கப் படுபவை." (17:36)

முஸ்லிம்களில் சிறந்தவர் யார்? என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு, "எவருடைய நாவை விட்டும் கையை விட்டும் பிற முஸ்லிம்கள் பாதுகாப்பு பெறுகிறார்களோ அவர் தான்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி), நூல்: திர்மிதி-2504

''இரண்டு தாடைகளுக்கும் இரு தொடைகளுக்கு மிடையே உள்ளவற்றைப் (பாதுகாப்பதற்கு) பொறுப்பேற்றுக் கொள் கிறாரோ அவருக்கு நான் சொர்க்கத்துக்குப் பொறுப்பேற்றுக் கொள்கிறேன்''' என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஸஹ்ல் பின் ஸஃது(ரலி), நூல்: புகாரி-6474

ஒரு அடியான் நல்லதா கெட்டதா என சிந்திக்காமல் ஒரு வார்த்தையைப் பேசிவிடுகிறான், அதன் காரணமாக அவன் நரகத்தில் மேற்கிற்கும் கிழக்கிற்குமிடையேயுள்ள தூரத்தை விட வெகுதூரம்(படுபாதாளத்தில்)விழுந்துவிடுகிறான் என நபி(ஸல்)கூறினார்கள். (புகாரி-6477, அஹ்மத்)

**பயன்கள்:**

**1.**நாவின் ஆபத்தும் அதைத் தற்காத்துக் கொள்வதன் அவசியமும் விவரிக்கப்பட்டுள்ளது. ஒருவன் சிந்திக்காமல் சொல்கிற ஒரு வார்த்தையால் நரகத்தில் விழுந்து விடுகிறான். இவ்வாறு அல்லாஹ்வுக்கு மாறான வழிகளில் அவன் தனது நாவைப் பயன்படுத்துவது நரகம் செல் வதற்குரிய காரணங்களில் ஒன்றாக இருக்கின்றது. நாவைப் பாதுகாப்பது சொர்க்கம் செல்வதற்குரிய காரணங்களில் ஒன்றாகும். மனிதர்களின் பெரும்பாலான தவறுகளும் அவர்களின் கவனக்குறைவும் பயனற்ற பேச்சுக்களில் தம் நாவைப் பயன்படுத்துவதால் ஏற்படுகின்றன.

**2.**மனிதன் தனது சொல், செயல்களுக்கு நிச்சயம் கேள்வி, கணக்குக் கேட்கப்படுவான். புலன்களில் மிக ஆபத்திற்குரியது நாவும், மர்ம உறுப்புமாகும்.

**புறம் பேசுவது ஹறாம்**

அல்லாஹ் கூறுகிறான்: ''உங்களில் ஒருவர் மற்றவரைப் புறம் பேசாதீர்கள். உங்களில் எவரேனும் இறந்த தமது சகோதரனின் மாமிசத்தைச் சாப்பி விரும்புவாரா? அதை வெறுப்பீர்கள்.'' (49:10)

''புறம் பேசுதல் என்றால் என்ன? என்பதை நீங்கள் அறிவீர்களா?''என்று நபி(ஸல்) கேட்டதும் 'அல்லாஹ்வும் அவன் தூதருமே மிக அறிந்தவர்கள்'' எனத் தோழர்கள் கூறினர். பிறகு நபி(ஸல்)அவர்கள்,(புறம் பேசுதல் என்பது) 'உன் சகோதரனைப் பற்றி அவன் விரும்பாததை நீ கூறுவது ஆகும்'' எனக் கூறினார்கள். 'நான் கூறுவது அவனிடம் இருந்தால் அது பற்றி என்ன கருதுகிறீர்கள்?'' எனக் கேட்கப்பட்டது? அதற்கு, ''நீ கூறுவது அவனிடமிருந்தால் நீ அவனை புறம் பேசிவிட்டாய். நீ கூறுவது அவனிடம் இல்லையெனில் நீ அவன் மீது அவதூறு கூறிவிட்டாய்'' என்று நபி (ஸல்) கூறியதாக அபூஹுரைரா(ரலி) அறிவிக்றார்கள். (முஸ்லிம்-2589)

ஆயிஷா (ரலி) அறிவிப்பதாவது: நான் நபி(ஸல்)அவர்களிடம் ஸஃபிய்யா உடைய இன்னின்ன விஷயங்கள் உங்களுக்குப் போதுமே! என்று (அதாவது அவர்கள் குட்டையாக இருப்பதை எண்ணிக்)கூறினேன்.அதற்கு நபி(ஸல்)அவர்கள் ''நீ கூறிய அந்த வார்த்தையை கடல் நீரில் கலக்கினால் அது அந்த நீரையே மாற்றிகிவிடும்'' எனக் கூறினார்கள்.(அபூதாவுது-4875)

''ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் பிற முஸ்லிமின் உயிர், மானம் மரியாதை, உடைமைகள் யாவும் கண்ணியமான வையாகும்'' என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-2564

''அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புகிறவர் நல்லதைச் சொல்லட்டும் அல்லது மௌனமாக இருக்கட்டும்''எனவும் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபுஹுரைரா(ரலி), திர்மிதி-2500
''யார் தனது சகோதரனின் மான மரியாதையைக் காக்கிறாரோ அவரது முகத்தை அல்லாஹ் மறுமையில் நரகத்தை விட்டும்காப்பான்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபுத்தர்தா(ரலி), (திர்மிதி-1931)

**பயன்கள்:**

**1.**புறம் பேசுவது ஹராம். அது பெரும்பாவங்களைச் சேர்ந்தது. புறம் பேசியவனுக்கு கடும் தண்டனை உண்டு.

**2.**ஒரு மனிதனைப் பற்றி அவன் விரும்பாததைச் சொல்வது விலக்கப்பட்ட புறம் ஆகும். அவன் கூறுவது உண்மையில் அந்த மனிதனிடம் இருந்தாலும் சரியே!

**3.**புறம் பேசுபவனை ஆட்சேபிப்பதும் அவன் புறம் பேசுவதை விட்டும் அவனைத் தடுப்பதும் கடமையாகும். புறம் பேசுவதைக் கேட்பதும் ஹராமாகும். ஒரு முஸ்லிமின் மானம் மரியாதையைக் பாதுகாப்பதற்கு சிறப்புண்டு. அவ்வாறு செய்பவரது முகம் மறுமையில் நரகத்தை விட்டும் பாதுகாக்கப்படும் எனும் வகையில்.

**4.**ஒரு மனிதன் விரும்பாததைச் சொல்வதாலும் சைக்கினை செய்வதாலும் புறம் ஏற்பட்டுவிடும்.

**உண்மையின் சிறப்பும் பொய்யின் இழிவும்**

அல்லாஹ் கூறுகிறான்: "அல்லாஹ்வின் வசனங்களை நம்பாதோரே பொய்யை அட்டுக்கட்டுவார்கள். அவர்களே பொய்யர்கள்." (16:105)

"நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். மேலும் நீங்கள் உண்மையாளர்களுடன் இருங்கள்."" (9:119)

''அவர்கள் அல்லாஹ்விடம் உண்மையாக நடந்து கொண்டால் அது அவர்களுக்குச் சிறந்ததது.'' (47:21)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: ''உனக்கு சந்தேகமாக உள்ளதை நீ விட்டு விட்டு சந்தேகமில்லாததைப் பின்பற்று. ஏனெனில் உண்மை நிம்மதியைத் தரக்கூடியதாகும். பொய் கலக்கத்தைத் தருவதாகும்.''' அறிவிப்பவர்: ஹஸன் பின் அலி(ரலி), நூல்: திர்மதி-2518

''உண்மை நன்மையின் பால் வழிகாட்டுகிறது. நன்மை சொர்க்கத்தின் பால் வழிகாட்டுகிறது. ஒரு மனிதன் உண்மை பேசுவான் எனில் இறுதியில் அல்லாஹ்விடம் அவன் மிக்க உண்மையாளனாக ஆகிவிடுவான். பொய் பாவத்தின் பால் வழிகாட்டுகிறது. பாவம் நரகின் பால் வழிகாட்டுகிறது. ஒரு மனிதன் பொய் சொல்லுகிறான் எனில் இறுதியில் மிகப் பெரும் பொய்யன் என அல்லாஹ்விடம் எழுதப்படுவான்''' என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத்(ரலி), நூல்: புகாரி-6094,முஸ்லிம்-2607

''நான்கு காரியங்கள் எவனிடமுள்ளதோ அவன் அப்பட்ட மான நயவஞ்சகனாவான். அவற்றில் ஏதேனும் ஒன்று அவனி டத்தில் இருக்கும்போதெல்லாம் அவன் அதை விட்டுவிடும் வரை நயவஞ்சகத்தின் ஒரு தன்மையும் அவனிடத்தில்

இருந்துகொண்டிருக்கும். அவை: நம்பினால் துரோகம் செய்வான், பேசினால் பொய்யுரைப்பான், ஒப்பந்தம் செய்தால் அதை மீறுவான். விவாதம் செய்தால் நேர்மை தவறிப் பேசுவான்"" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி), நூல்: புகாரி-34, முஸ்லிம்-58

**பயன்கள்:**

**1.**பொய் சொல்வது பற்றி எச்சரிக்கப்பட்டுள்ளது. அது நயஞ்சகர்களின் தன்மைகளில் ஒன்று. மக்களிடையே பொய்யைப் பரப்புபவனுக்கு கடும் தண்டனையுண்டு.

**2.**பொய் நரகத்தில் நுழைவதற்குரிய காரணங்களில் ஒன்றாக இருப்பதுபோல் அது பாவத்தின் பக்கமும் இழுத்துச் செல்கிறது.

**3.**உண்மையின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. எல்லாக் காரியங்களிலும் உண்மை சொல்ல வேண்டுமென ஆர்வ மூட்டப்பட்டுள்ளது.

**4.**பொய் நயவஞ்சகத்தின் அடையாளங்களில் ஒன்று.

**தவ்பா-பாவமன்னிப்புத் தேடல்**

அல்லாஹ் கூறுகிறான்: "நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள் இதனால் வெற்றியடைவீர்கள."""; (24:31)

''நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்விடம் தூய்மையான முறையில் பாவமன்னிப்புத் தேடுங்கள்.''" (66:8)

அஃகர்ரு பின் யஸார்(ரலி) அறிவிப்பதாவது: ''மனிதர்களே! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுங்கள். நான் ஒவ்வொரு நாளும் அல்லாஹ்விடம் நூறு முறை பாவமன்னிப்புத் தேடுகிறேன்''" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.நூல்: முஸ்லிம்-2702

''உங்களில் ஒருவர் வனாந்தரத்தில் தனது ஒட்டகத்தை தவறவிட்ட பிறகு திடீரென அது கிடைக்கப் பெற்ற நிலையில் அவர் அடைகின்ற மகிழ்ச்சியை விட அதிகமாக அல்லாஹ், தனது அடியான் பாவமன்னிப்புத் தேடும்போது மகிழ்ச்சி அடைகிறான்'' என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்:அனஸ்(ரலி),நூல்:புகாரி-6309,முஸ்லிம்-2747

''எல்லா மனிதர்களும் தவறு செய்பவர்களே. தவறு செய்பவர்களில் சிறந்தவர்கள் மன்னிப்புத் தேடுபவர்களே!'' என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ்(ரலி) நூல்: திர்மிதி-2499

''உயிர் தொண்டைக்குழியை அடைவதற்கு முன்பு வரை ஒரு அடியானின் தவ்பாவை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்''" என நபி(ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உமர்(ரலி), நூல்: திர்மிதி-3337, இப்னுமாஜா-4253

அபுமூஸா(ரலி) அறிவிப்பதாவது:"அல்லாஹ் இரவில் தன் கையை நீட்டுகிறான் பகலில் பாவம் செய்தவர் மன்னிப்புக் கேட்பதற்காக. பகலில் தன் கையை நீட்டுகிறான் இரவில் பாவம் செய்தவன் மன்னிப்புக் கோருவதற்காக. சூரியன் மேற்கில் உதிக்கும் வரை இவ்வாறு செய்கிறான்"என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்-2759)

**பயன்கள்:**

**1.**எல்லா நேரத்திலும் தவ்பா செய்வது கடமையாகும். தவ்பா செய்வது அடியார்களின் வெற்றிக்கும் ஈடேற்றத்திற்கும் காரணமாக அமையும். அனைத்துப் பாவங்களிலிருந்தும் பாவமன்னிப்புத் தேடுவது கூடும். அவை எவ்வளவு பெரிய பாவங்களாக இருந்தாலும் சரியே!

**2.**பாவமன்னிப்புத் தேடுவது குறித்து அல்லாஹ் மகிழ்சி அடைகிறான் எனும் விதத்தில் அதன் சிறப்பும் அல்லாஹ்வின் விசாலமான அருளும் அவனது கருணையும் இங்கு கூறப் பட்டுள்ளது.

**3.**தவறிழைப்பது மனித இயல்பு. எனினும் அதிலிருந்து மீண்டு அதற்காக மன்னிப்புத்தேடுவது அவன் மீது கடமை.

**தவ்பாவின் நிபந்தனைகளும் சில சட்டங்களும்**

**1.**உயிர் தொண்டைக் குழியை அடைந்து, மரணம் வருவ தற்கு முன் தவ்பாச் செய்து விடவேண்டும்.

**2.**சூரியன் மேற்கிலிருந்து உதிப்பதற்கு முன் தவ்பாச் செய்துவிட வேண்டும். அவ்வாறு உதித்து விட்டால் தவ்பாச் செய்வது பயனளிக்காது.

**3.**ஒருவன் ஒரு பாவத்திற்காக உண்மையான முறையில் தவ்பாச் செய்த பின் மீண்டும் அப்பாவத்தைச் செய்தால் அவனது முந்தைய தவ்பா ஏற்றுக் கொள்ளப்படும்.எனினும் புதிதாகச் செய்த பாவத்திற்கு மீண்டும் ஒரு முறை தவ்பா செய்வது அவசியமாகும்.

**4.**பாவம் செய்வதை விட்டுவிட வேண்டும். நடந்துவிட்ட பாவத்திற்காக மனம் வருந்த வேண்டும். மீண்டும் பாவம் செய்யாமலிருக்க உறுதிகொள்ள வேண்டும்.

**ஸலாம் சொல்லுதல்**

அல்லாஹ்கூறுகிறான்: "நம்பிக்கை கொண்டோரே! உங்கள் வீடுகளல்லாத வேறு வீடுகளில் அவர்களின் அனுமதி பெறாமலும், அவ்வீட்டாருக்கு ஸலாம் கூறாமலும் நுழையா தீர்கள்." (24:27)

''நீங்கள் நம்பிக்கை கொள்ளாத வரை சொர்க்கம் செல்ல முடியாது நீங்கள் ஒருவரையொருவர் நேசிக்காத வரை நம்பிக்கை கொள்ள முடியாது. நான் ஒரு காரியத்தை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? அதை நீங்கள் செய்தால் ஒருவரையொருவர் நேசிப்பீர்கள். (ஆம்!) உங்களுக்கிடையே ஸலாம் சொல்வதைப் பரவலாக்குங்கள்''' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-54

''மனிதர்களே! ஸலாம் சொல்வதைப் பரவலாக்குங்கள், (பசித்தோருக்கு) உணவளியுங்கள், சொந்த பந்தங்களுடன் இணைந்து வாழுங்கள்,இரவில் மக்கள் நித்திரையிலிருக்கும் போது தொழுங்கள் சுகமாக சுவர்க்கம் செல்வீர்கள்'' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் ஸலாம்(ரலி),
நூல்: திர்மிதி-2485, இப்னுமாஜா-3251
உங்களில் ஒருவர் ஒரு சபைக்குச் சென்றால் ஸலாம் சொல்லட்டும். உட்கார வேண்டுமெனத் தோன்றினால் உட்காரட்டும். பிறகு எழுந்து செல்லும்போது ஸலாம் சொல்லட்டும். இரண்டாவதாகக் கூறிய ஸலாமை விட முதல் ஸலாம் மிகத் தகுதியானதன்று என நபி (ஸல்)கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி)
நூல்: திர்மிதி-2706 இப்னுமாஜா-5208

*சில சட்டங்கள்:*

**1.**ஸலாம் சொல்வது சிறந்தது. இது சொர்க்கம் செல்வதற்குக் காரணமான பரஸ்பர நேசத்திற்கு வழிவகுக்கிறது.

**2.**ஸலாம் சொல்வதென்பது அறிந்தவருக்கு மட்டுமல்ல. முஸலிம்களில் அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் சொல்வது விரும்பத்தக்கது.

**3.**சுன்னத்தான ஸலாமிற்குரிய வார்த்தை 'அஸ்ஸலாமு அலைக்கும்" என்பதாகும். 'வரஹ்மதுல்லாஹ்" என்பதைச் சேர்த்துச் சொல்வது சிறந்தது. 'வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு" என மேலதிகமாகச் சொல்வது மிகச் சிறந்தது. ஸலாம் கூறியவருக்கு அவர் கூறியது போன்று பதிலளிப்பது கடமை. அதை விட அதிகமாகக் கூறுவது விரும்பத்தக்கது.

**4.**காஃபிர்களுக்கு நாம் முந்திக் கொண்டு ஸலாம் சொல்வது ஹராம். அவர்களாக நமக்கு ஸலாம் கூறினால் நாம் வஅலைக்கும் எனக் கூற வேண்டும்.

**5.**ஒரு சபையில் முஸ்லிம்களும் காஃபிர்களும் இருந்தால் அவர்களுக்கு ஸலாம் சொல்வது கூடும்.

**6.**இரு முஸ்லிம்கள் பிரிந்து சிறு இடைவெளிக்குப் பின் சந்தித்தாலும் ஸலாம் சொல்வது விரும்பத்தக்கதாகும்.

**7.**வீட்டாரின் அனுமதியின்றி வீடுகளில் நுழைவது ஹராம்.

**உண்பதன் ஒழுங்கு முறைகள்**

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் சாப்பிடும்போது 'பிஸ்மில்லாஹ்'' சொல்லட்டும். ஆரம்பத்தில் அதைக் கூற மறந்துவிட்டால் (நினைவு வந்ததும்) 'பிஸ்மில்லாஹி ஃபீ அவ்வலிஹி வஆகிரிஹி '' எனக் கூறட்டும். அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி),நூல்: திர்மிதி-1858, இப்னுமாஜா-3264

(பொருள்: இதன் ஆரம்பத்திற்கும் கடைசிக்கும் பிஸ்மில் லாஹ் சொல்லிக் கொள்கிறேன்.)

بِسْمِ اللهِ فِيْ أَوَّلِهِ وَآخِرِهِ

''(நீ சாப்பிடும்போது) அல்லாஹ்வின் பெயர் கூறு, உனது வலது கையால் சாப்பிடு, (தட்டில்) உனக்கு அருகில் உள்ளதிலிருந்து சாப்பிடு'''' என நபி(ஸல்)அவர்கள் என்னிடம் கூறினார்கள்'''' என உமர் பின் அபூஸலமா(ரலி)அறிவிக்கிறார்கள்.நூல்: புகாரி-5376, முஸ்லிம்-2022

''உங்களில் எவரும் தமது இடது கையால் சாப்பிடவோ தமது இடது கையால் குடிக்கவோ வேண்டாம். ஏனெனில் ஷைத்தான் தான் இடது கையால் உண்ணவும், இடது கையால் குடிக்கவும்

செய்கிறான்"நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி), நூல்: முஸ்லிம்-2020

அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்: "நபி(ஸல்)அவர்கள் எந்த உணவையும் குறை கூறியதில்லை. அவர்கள் விரும்பினால் உண்பார்கள். விரும்பமில்லையெனில் விட்டு விடுவார்கள்." நூல்: புகாரி-3563, முஸ்லிம்-2064

**பயன்கள்:**

**1.**சாப்பிடும்போது 'பிஸ்மில்லாஹ்" கூறுவது விரும்பத்தக் கதாகும். மறந்துவிட்டால் நினைவு வருகிறபோது 'பிஸ்மில் லாஹி ஃபீ அவ்வலிஹி வஆகிரிஹி " எனக் கூறிக் கொள்ள வேண்டும். சாப்பிட்டு முடித்ததும்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِي اَطْعَمَنِيْ هذَا وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِّنِّي وَلاَ قُوَّةٍ

அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனீ ஹாதா வரஸகனீஹி மின்கைரி ஹவ்லிம் மின்னி வலா குவ்வா என்று கூறுவதும் விரும்பத்தக்கது.

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே அவனே எனக்கு இந்த உணவை அளித்தான். என்னிடமிருந்து எவ்வித முயற்சியும் சக்தியுமின்றியே இதனை எனக்கு அருளினான்.)

**2.**இடது கையால் சாப்பிடக் கூடாது. அது ஷைத்தானுக்கு ஒப்பாவதாகும். எனினும் நிர்ப்பந்தமுள்ளவர் இடது கையால் சாப்பிட்டுக் கொள்ளலாம்.

**3.**உணவைக் குறை கூறாமலிருப்பது சுன்னத்தாகும். மாறாக விரும்பினால் உண்ணலாம். இல்லையென்றால் விட்டு விடலாம். தெரியப்படுத்துவதற்காக அதன் குறையைக் கூற லாம்.

**மலம் ஜலம் கழித்தல்**

நபி(ஸல்)அவர்கள் கழிப்பிடத்திற்குச் செல்லும்போது

اَللّٰهُمَّ اِنِّي أَعُوْذُ بِكَ مِنَ الْخُبْثِ وَالْخَبَائِثِ

அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் குப்ஸி வல் கபாயிஸி எனக் கூறுவார்கள்.
அறிவிப்பவர்:அனஸ்(ரலி),நூல்:புகாரி-142,முஸ்லிம்-375

(பொருள்: இறைவா! ஆண், பெண் ஷைத்தான்களின் தீங்கை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.)

நபி(ஸல்) அவர்கள் கழிப்பிடத்திலிருந்து வெளியே வரும் போது غُفْرَانَكَ "ஃகுப்ஃரானக" எனக்

கூறுவார்கள். அறிவிப்பவர்:ஆயிஷா(ரலி), நூல்: திர்மிதி-7,அபூதாவூது-30

(பொருள்: இறைவா உன்னிடம் மன்னிப்புத் தேடுகிறேன்)

தேங்கிக் கிடக்கும் நீரில் சிறுநீர் கழிப்பதை நபி(ஸல்) தடை செய்துள்ளனர். அறிவிப்பவர்: ஜாபிர்(ரலி), நூல்: முஸ்லிம்-281

**பயன்கள்:**

**1.**ஒரு முஸ்லிம் கழிப்பிடம் செல்லும்போது 'அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் குப்ஸி வல்கபாயிஸி'' எனவும் வெளியே வரும்போது 'குஃப்ரானக'' எனவும் கூறுவது விரும்பத் தக்கதாகும்.

**2.**மக்களின் பார்வையை விட்டும் மர்மஸ்தானத்தை மறைத்துக் கொள்வது அவசியம். மலஜலம் கழிக்கும்போது மக்களை விட்டும் தூரமாகச் சென்று மறைவாக இருப்பது விரும்பத் தக்கது. திறந்த வெளியில் மலஜலம் கழிக்கும் போது கிப்லாவை முன்னோக்காமலும் பின்னோக்காமலும் இருப்பதற்கு அக்கறை காட்ட வேண்டும்.

**3.** உடையில் உடலில் மலஜலம் பட்டுவிடாமல் கவனமாக இருப்பதற்கும், மலஜலம் கழித்த பிறகு சுத்தம் செய்வதற்கும் அக்கறை காட்ட வேண்டும்.

**4.** இஸ்லாமிய மார்க்கம் மல ஜலம் கழிக்கும் ஒழுங்கு முறைகள் உட்பட எல்லா விஷயங்களையும் உள்ளடக்கி, அவற்றைத் தெளிவுபடுத்தியும் இருக்கிறது எனும் வகையில் அதன் பரிபூரணத்துவம் விளக்கப்பட்டுள்ளது.

**தும்மல், கொட்டாவி**

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ் தும்மலை விரும்புகிறான். கொட்டாவியை வெறுக்கிறான். உங்களில் ஒருவர் தும்மி (அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறி) அல்லாஹ்வைப் புகழ்ந்தால் அதைக் கேட்கின்ற ஒவ்வொரு முஸ்லிமும் யர்ஹமுகல்லாஹ் எனக் கூறுவது கடமையாகும். கொட்டாவி ஷைத்தான் மூலம் ஏற்படுகிறது. ஆகவே உங்களில் யாரும் கொட்டாவி விடும்போது அதை முடிந்த அளவு (வராமல்) தடுத்துக் கொள்ளட்டும். ஏனெனில் அவர் கொட்டாவி விட்டால் அவரைப் பார்த்து ஷைத்தான் சிரிக்கிறான்."

அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி-6226

"உங்களில் ஒருவர் தும்மினால் அவர் அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறட்டும் அவரது சகோதரன்

அல்லது நண்பன் யர்ஹமுகல்லாஹ் எனக் கூற வேண்டும். அவர் யர்ஹமுகல்லாஹ் எனக் கூறினால் (தும்மியவர்) யஹ்தீக்கு முல்லாஹ் வயுஸ்லிஹுு பாலகும் எனக் கூற வேண்டும்" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி), நூல்: புகார-6224

(الحمد لله - எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!

يرحمك الله - அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவானாக!

يهديكم الله ويصلح بالكم -அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டி, உங்கள் நிலையை சீர்படுத்துவானாக)

உங்களில் ஒருவன் தும்மி அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறினால் அவனுக்கு பதில் கூறுங்கள். அவன் அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறவில்லையானால் நீங்கள் பதில் கூற வேண்டாம் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி), நூல்: முஸ்லிம்-2992
"நபி(ஸல்) அவர்கள் தும்மினால் தம் கை அல்லது ஒரு துணியைக் கொண்டு தமது முகத்தை மூடிக் கொண்டு அதன் மூலம் தமது சப்தத்தைத் தாழ்த்திக் கொள்வார்கள்."அறிவிப்பவர்: அபூஹுுரைரா(ரலி), நூல்: திர்மிதி-2745, அபூதாவூத்-5029)

**பயன்கள்:**

**1.**தும்மியவர் அல்ஹம்துலில்லாஹ் எனக் கூறினால் அதைக் கேட்கின்ற ஒவ்வொருவரும் யர்ஹமுகல்லாஹ் எனக் கூறுவது விரும்பத்தக்கது.

**2.**அவர் அல்ஹம்துலில்லாஹ் கூறவில்லையெனில் யர்ஹ முகல்லாஹ் கூற வேண்டியதில்லை.

**3.(**இயன்ற அளவு**)** கொட்டாவி வராமல் தடுப்பதும் அதை அடக்குவதும் விரும்பத்தக்கதாகும்.

**4.**கொட்டாவி விடும்போது கையை வாயில் வைத்துக் கொள்வது விரும்பத்தக்கதாகும்.
**5.**தும்மக்கூடிய நேரத்தில் கையாலோ சிறு துணியாலோ முகத்தை மூடிக் கொள்வது விரும்பத்தக்கதாகும்.

**6.**தும்மல், கொட்டாவி விடும் நேரத்தில் சப்தத்தை உயர்த்துவது வெறுக்கத்தக்கதாகும்.
நாய் வளர்த்தல்

நபி**(**ஸல்**)**அவர்கள் கூறினார்கள்: **"**கால் நடைகள் அல்லது பயிர்களைப் பாதுகாப்பதற்காகவோ வேட்டைக்காகவோ அல்லாமல் யாரேனும் நாய் வளர்த்தால் ஒவ்வொரு நாளும் அவரது நன்மையில்

ஒரு கீராத் அளவு குறைந்து விடும்" அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி),புகாரி-5480,முஸ்லிம்-1575
(ஒரு கீராத்தென்பது பெரிய மலையளவாகும்)

**நாய்வளர்த்தல்**

"உங்களில் ஒருவரின் பாத்திரத்தில் நாய் வாய் வைத்து விட்டால் அதை ஏழு முறை கழுவுங்கள். எட்டாவது முறை மண்ணால் கழுவுங்கள்"" என நபி (ஸல்) கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-280

**பயன்கள்:**

1.வேட்டை, கால்நடை, விவசாயப் பாதுகாப்பு அல்லாத வற்றுக்காக நாய் வளர்ப்பது ஹராமாகும்.
2.நாய்களை விட்டும் வெருண்டோடுமாறும் அவைகளைத் தவிர்ந்து கொள்ளுமாறும் ஏவப்பட்டுள்ளது.

3.நாய் வாய் வைத்த பாத்திரத்தை ஏழு முறை கழுவி எட்டாவது முறை மண்ணால் கழுவ வேண்டு மென்பதால் அது பெரும் அசுத்தம் என எச்சரிக்கப்பட்டுள்ளது.

**அல்லாஹ்வை நினைவுகூர்தல்**

அல்லாஹ் கூறுகிறான்: ''அல்லாஹ்வை அதிகம் நினைவு கூருங்கள். அதனால் நீங்கள் வெற்றி பெறுவீர்கள்.'''' (62:10)

''நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அதிகமதிகம் நினையுங்கள். அவனைக் காலையிலும் மாலையிலும் துதியுங்கள்.'''' (33:41)

''தம் இறைவனை நினைப்பவனுக்கும் தமது இறைவனை நினைக்காதவனுக்கும் உதாரணம் உயிருடன் இருப்பவன் மற்றும் மரணித்தவனின் தன்மையைப் போன்றாகும்'' என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி), நூல்: புகாரி-6407,முஸ்லிம்-779

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: ''நாவுக்கு இலேசான, தராசுக்குக் கனமான, ரஹ்மானுக்குப் பிரியமான இரு வார்த்தைகள் 'சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல் லாஹில் அழீம்'' அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி),நூல்: புகாரி-6406, முஸ்லிம்-779

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ سُبْحَانَ اللهِ الْعَظِيْمِ

(பொருள்: அல்லாஹ்வைப் புகழ்வதோடு அவன் தூயவன் என்றும் மகத்தானவன் என்றும் துதிக்கவும் செய்கிறேன்)

''சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் என நான் கூறுவது சூரியன் எவற்றின் மீதெல்லாம் உதிக்கின்றதோ அவை அனைத்தையும் விட எனக்குப் பிரியமானது'' என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-2695

(பொருள்: அல்லாஹ் தூய்மையானவன்! எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை! அல்லாஹ் மிகப் பெரியவன்.)

திக்ரில் மிகச் சிறந்தது 'லாஇலாஹ இல்லல்லாஹ்'' என் பதாகும். (நபிமொழி) அறிவிப்பவர்: ஜாபிர்(ரலி),(திர்மிதி)

**தேர்ந்தெடுக்கப்பட்ட திக்ருகள்**

**தூங்கும்போது சொல்ல வேண்டியது:**

اَللّٰهُمَّ بِاسْمِكَ أَمُوْتُ وَأَحْيَا

அல்லாஹும்ம பிஸ்மிக அமூத்து வஅஹ்யா

(பொருள்: யா அல்லாஹ்! உன் பெயரைக் கொண்டே மரணிக்கிறேன் உயிர் வாழ்கிறேன்) (புகாரி-3614)

தூக்கத்திலிருந்து விழிக்கும்போது சொல்ல வேண்டியது:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِي أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُوْرُ

அல்ஹம்து லில்லாஹில்தீ அஹ்யானா பஃதமா அமாதனா வஇலைஹின் நுஷூர்.

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனே நம்மை மரணமென்னும் தூக்கத்தில் ஆழ்த்திய பின் உயிர் பெற்றெழச் செய்தான். மேலும் மீண்டும் எழுப்பப்பட்டு அவனிடமே செல்ல வேண்டியுள்ளது)

**வாகனத்தில் ஏறும்போது சொல்ல வேண்டியது:**

بِسْمِ اللهِ، اَلْحَمْدُ لِلّٰهِ سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِيْنَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ

பிஸ்மில்லாஹி அல்ஹம்து லில்லாஹி சுப்ஹானல்லதீ ஸக்கர லனா ஹாதா வமா குன்னா லஹூ முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன். (அபூதாவூத்-2602)

(பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால்... எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன்தான் இவ்வாகனத்தை நமக்கு வசப்படுத்திக் கொடுத்தான். உண்மையில் அதற்கான சக்தியை நாம்

பெற்றிருக்கவில்லை. மேலும் திண்ணமாக நாம் நம் இரட்சகன் பக்கமே திரும்பிச் செல்பவர்கள்.)

**ஓரிடத்தில் தங்கும்போது சொல்ல வேண்டியது:**

أَعُوْذُ بِكَلِمَاتِ اللهِّ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ

அஊது பிகலிமாத்தில்லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரிமா கலக் (பொருள்: அல்லாஹ்வின் பரிப+ரணமான வார்த்தை களைக் கொண்டு அவன் படைத்தவற்றின் தீங்குகளை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்) (முஸ்லிம்-2708)

உளுவுக்கு முன்னர் சொல்ல வேண்டியது:
பிஸ்மில்லாஹ் (ஆதாரம்: நஸயீ)

**உளுவுக்கு பின்னர் சொல்ல வேண்டியது:**

أَشْهَدُ أَنْ لا إِلَهَ إِلاّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ

அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸு லுஹு

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையும் இல்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். மேலும் முஹம்மது(ஸல்)

அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனது தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சி சொல்கிறேன்.)(முஸ்லிம்-234)

**வீட்டிலிருந்து வெளியேறும்போது சொல்ல வேண்டியது:**

بِسْمِ اللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ وَلاَ حَوْلَ وَلا قُوَّةَ إِلاَّ بِاللّٰهِ

பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹி வலாஹவ்ல வலா குவ்வத இல்லாபில்லாஹ்

(பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால்...! அவனயே நான் முழுவதும் சார்ந்திருக்கின்றேன்.நன்மை செய்வதற்கும் தீமையிலிருந்து விலகுவதற்கும் அல்லாஹ்வின் உதவி கொண்டல்லாமல் முடியாது.) (திர்மிதி-3426)

**வீட்டிற்குள் நுழையும்போது சொல்ல வேண்டியது:**

بِسْمِ اللّٰهِ وَلَجْنَا وَبِسْمِ اللّٰهِ خَرَجْنَنَا وَعَلَى اللّٰهِ تَوَكَّلْنَا

பிஸ்மில்லாஹி வலஜ்னா வபிஸ்மில்லாஹி கரஜ்னா வஅலா ரப்பினா தவக்கல்னா

(பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால் நுழைகிறோம். அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டே புறப்படுகின்றோம். எங்களின் இரட்சகன் மீதே நம்பிக்கை வைத்துள்ளோம்.)(அபூதாவூத்-5096, இது பலவீனமானது.)

**நபி(ஸல்)அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லும் முறை:**

اَللّٰهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيْمَ وَعلى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ، اَللّٰهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آل إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

அல்லாஹூம்ம ஸல்லி அலாமுஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமாஸல்லைத்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதும் மஜீத். அல்லாஹூம்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதும் மஜீத்.

(பொருள்: யா அல்லாஹ்! முஹம்மதின் மீதும் அவர்களின் குடும்பத்தார் மீதும் கருணை பொழிவாயாக! இப்ராஹீம் மீதும் அவர்களின் குடும்பத்தார்கள் மீதும் நீ கருணை பொழிந்தது போன்று. நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்து வத்திற்கும் உரியவன். யா அல்லாஹ்! முஹம்மதின் மீதும் அவர்களின் குடும்பத்தார்கள் மீதும் பாக்கியம் அருள் வாயாக. இப்ராஹீம் நபி மீதும் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ பாக்கியம் அருளியது போன்று. நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன்.

**காலையில் சொல்ல வேண்டியவை:**

اَللّٰهُمَّ بِكَ أَصْبَحْنَا وَبِكَ أَمْسَيْنَا وَبِكَ نَحْيَا وَبِكَ نَمُوْتُ وَإِلَيْكَ النُّشُوْرُ

அல்லாஹும்ம பிக அஸ்பஹ்னா வபிக அம்ஸைனா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைகன் நுஷூர்

(பொருள்: இறைவா! உன் பெயரைக் கொண்டு காலைப் பொழுதில் நாங்கள் ஆகிவிட்டோம். உனது பெயரைக் கொண்டே மாலைப் பொழுதில் ஆனோம். மேலும் உன் பெயரைக் கொண்டே நாங்கள் உயிர் வாழ்கிறோம். உன் பெயரைக் கொண்டே நாங்கள் மரணமாவோம். மேலும் எழுப்பப்படுவதும் உன் பக்கமேயாகும்.)

**மாலையில் சொல்ல வேண்டியவை:**

اَللّٰهُمَّ بِكَ أَمْسَيْنَا وَبِكَ أَصْبَحْنَا وَبِكَ نَحْيَا وَبِكَ نَمُوْتُ وَإِلَيْكَ الْمَصِيْرُ

அல்லாஹும்ம பிக அம்ஸைனா வபிக அஸ்பஹ்னா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைகல் மஸீர்

(பொருள்: இறைவா! உன் பெயரைக் கொண்டே மாலைப் பொழுதில் நாங்கள் ஆகிவிட்டோம். உனது பெயரைக் கொண்டே காலைப் பொழுதில் ஆனோம். மேலும் உன் பெயரைக் கொண்டே நாங்கள் உயிர் வாழ்கிறோம். உன் பெயரைக் கொண்டே நாங்கள் மரணமாவோம். மேலும் திரும்பி வருவதும் உன் பக்கமேயாகும்.)

**நண்பன்**

அல்லாஹ் கூறுகிறான்: ''அந்த நாளில் இறையச்சம் உடையோரைத் தவிர நண்பர்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருப்பார்கள்.''' (43:67)

''அநீதி இழைத்தவன் தனது கையைக் கடிக்கும் நாளில் 'இத்தூதருடன் நான் ஒரு தொடர்பை ஏற்படுத்தியிருக்கக் கூடாதா? அன்னாரை நான் உற்ற நண்பனாக ஆக்காமல் இருந்திருக்கக் கூடாதா? அறிவுரை எனக்குக் கிடைத்த பின்னும் அதை விட்டு என்னை அவன் வழிகெடுத்து விட்டான்'' எனக் கூறுவான். ஷைத்தான் மனிதனுக்குத் துரோகம் செய்பவனாகவே இருக்கிறான்.''' (25:27-29)

''அவர்களில் ஒருவர் மற்றவரை முன்னோக்கி விசாரித்துக் கொள்வார்கள். 'எனக்கு ஒரு நண்பன் இருந்தான். நீயும் (மறுமையை) நம்புவோரில் ஒருவனா? நாம் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகும்போது நாம் கூலி கொடுக்கப்படுவோமா? என்று என்னிடம் கேட்டான்'' என அவர்களில் ஒருவர் கூறுவார். 'நீங்கள் (அவனை) எட்டிப் பார்க்கிறீர்களா?'' என்று இறைவன் கேட்பான். அவர் எட்டிப் பார்க்கும்போது அவனை நரகின் மத்தியில் காண்பார். 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! என்னைக் குழியில் தள்ள முயன்றாய்'' என்று (நரகவாசியிடம்) கூறுவார். எனது இறைவனின்

அருள் கொடை இல்லாதிருந்தால் (நரகத்திற்கு) கொண்டு வரப்பட்டோரில் நானும் ஆகியிருப்பேன்." (37:50-57)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:"ஒரு மனிதன் தனது நண்பனின் மார்க்கத்தில் இருப்பான். எனவே உங்களில் ஒருவர் யாருடன் நட்பு கொள்வதென சிந்தித்துப் பார்த்துக் கொள்ளட்டும்." (அபூதாவூது-4833, திர்மிதி-2378)

"அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத நாளில் அல்லாஹ் ஏழு பேருக்கு தனது நிழலின் கீழ் நிழல் கொடுப்பான்" என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அந்த ஏழு பேரில் "அல்லாஹ்வுக்காக நேசம் கொண்ட இருவர். அவர்கள் ஒன்று கூடுவதும் அல்லாஹ்வுக்காகவே, பிரிந்து செல்வதும் அல்லாஹ்வுக்காகவே" என்று குறிப்பிட் டார்கள். (புகாரி-660, முஸ்லிம்-1031)

**பயன்கள்:**

**1.**ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு நண்பன் இருப்பது அவசியமாகும். எனவே நன்மையின் பால் வழிகாட்டக் கூடிய அதற்கு உதவியாக இருக்கக்கூடிய நல்ல நண்பனை ஏற்படுத்திக் கொள்ள முயற்சி செய்யுங்கள்.

**2.**இறைநிராகரிப்பு மற்றும் இறைவனுக்கு மாறு செய்வதன் பக்கம் நண்பன் உன்னை இழுத்துச் செல்

பவனாக இருந்தால் அவனே விரோதிகளில் மிகக் கொடிய விரோதியா இருப்பான்.

**3.**காபிர்களை உற்ற நண்பர்களாக ஆக்கிக் கொள்வதி லிருந்து விலகிட வேண்டும்.ஏனெனில் அவர்கள் முஸ்லிமை நன்மையை விட்டும் வழிபாடு செய்வதை விட்டும் தடுப்பார்கள்.

**பொறுமை**

அல்லாஹ் கூறுகிறான்: ''நம்பிக்கை கொண்டோரே! பொறுமையாக இருங்கள். (இன்னல்களை) சகித்துக் கொள்ளுங்கள்.'''' (3:200)

''நிச்சயமாக நாம் உங்களை ஓரளவு பயத்தாலும், பசியாலும், பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றில் இழப்பை ஏற்படுத்தியும் சோதிப்போம். (இந்தநிலைகளில்) பொறுமையை மேற்கொள்வோருக்கு (நபியே!) நற்செய்தி கூறுங்கள்.'''' (2:155)

''முஃமினுடைய எல்லா காரியங்களும் அவனுக்கு நன்மை பயப்பதாகவே உள்ளன. அவனுக்கு ஏதேனும் ஒரு நன்மை ஏற்பட்டு அதற்காக அவன்(அல்லாஹ்வுக்கு)நன்றி செலுத் தினால் அது அவனுக்கு நன்மையாகும்.அவனுக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டு அதற்காக அவன் பொறுத்துக் கொண்டால்

அதுவும் அவனுக்கு நன்மையே. முஃமினுக்கு கிடைத்த இந்த நிலை மிகவும் ஆச்சரியமானதே!" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: சுஹைப் பின் ஸினான்(ரலி), முஸ்லிம்-2999

"எனது அடியானை அவனுக்குப் பிரியமான இரு கண்களை பறித்து சோதிக்கும்போது அதை அவன் பொறுத்துக் கொண்டால் அவ்விரண்டிற்குப் பகரமாக சொர்க்கத்தை அவனுக்குக் கொடுப்பேன்''' என அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ்(ரலி), புகாரி-5653

ஒரு முஸ்லிமுக்கு களைப்பு, நோய், துயரம், கவலை, துன்பம் இன்னும் முள் தைப்பது உட்பட்ட எது ஏற்பட் டாலும் அதற்குப் பகரமாக அல்லாஹ் அவனது பாவங்களை அழித்து விடுகிறான்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி-5652

"முஃமினான ஆண்களும் பெண்களும் தங்கள் உயிர், பிள்ளைகள், செல்வம் ஆகியவற்றில் சோதிக்கப்பட்டுக் கொண்டே இருப்பார்கள், எந்தக் குற்றமும் அற்றவர்களாக அல்லாஹ்வைச் சந்திக்கும்" வரை என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: திர்மிதி-2399

**பயன்கள்:**

**1.**எல்லாக் காரியங்களிலும் பொறுமை மேற்கொள் வதற்கு ஆர்வமூட்டப்பட்டுள்ளது. அதிருப்தி கொள்வது சோதனையின் கூலியைப் போக்கிவிடுகிறது எனும் வகையில் அது பற்றி எச்சரிக்கப்பட்டுள்ளது.

**2.**ஒரு முஸ்லிமுக்கு சோதனைகள் ஏற்படுவதன் மூலம் பாவங்கள் அழிக்கப்படுகின்றன.

**3.**வழிபாடுகளை நிறைவேற்றுவதிலும் பாவங்களை விடு வதிலும் பொறுமையாகயிருப்பது பொறுமையின் வகைகளில் மிகச் சிறந்ததாகும்.

**4.**தனக்கென இறைவன் பங்கிட்டுக் கொடுத்ததை முஸ்லிம் திருப்தி கொள்வது அவசியமாகும். ஏனெனில் அல்லாஹ் நன்கறிந்தவன், நுண்ணறிவாளன். அடியார்களின் நலன்களை அவனே மிக அறிந்தவன்.